[Sri O. P. Ramaswami Reddiar] [10th September 1958

என்று சிந்தித்துத் தங்களுடைய வாழ்க்கையை நல்ல முறையில் நடத்த வேண்டும். அப்படி நடத்துவது தங்களுக்கு மட்டும் அல்ல, மற்றவர்களுக்கும் அது வழி காட்டியாக இருக்க வேண்டும். அந்தக் குடும்பங்கள் தங்களுடைய வாழ்க்கையை தாங்கள் நினைத்தபடி நடத்துவதால்தான் இந்தமாதிரியான குற்றங்கள் நடைபெறுகின்றன. பெரியவர்களிடத்தில் தான் அதிகப்படியான குற்றம் இருக்கிறது. வருஷா வருஷம் கிரிமினல் கேஸ்கள், சிவில் கேஸ்கள் எவ்வளவு அதிகமாகிக்கொண்டு வருகின்றன என்பதைப் பார்க்கும்போது, எவ்வளவு குற்றங்கள் செய்யப்படுகின்றன என்பது நமக்குத் தெரிய வருகிறது. இப்பொழுது எத்தனை பேர்கள் கோர்ட்டு முன்னதாக வருகிறார்கள் என்பதைப் பார்த்தால், அதிகமாக வருவது தெரியும். இப்படி எவ்வளவு பேர்கள் வருகிறார்கள் என்பதைப் பார்த்தால், குற்றங்கள் அதிகமாக வருவதையும் எந்த முறையில் தங்களுடைய வாழ்க்கையை நடத்திக்கொண்டிருக்கிறார்கள், நடந்துகொண்டு வருகிறது என்பதையும் நாம் எல்லோரும் பார்க்கலாம். நல்ல முறையில் இவர்கள் தங்களுடைய வாழ்க்கையை நடத்துவதற்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும். பெரியவர்கள் நல்ல முறையில் தங்களுடைய வாழ்க்கையை நடத்த முன்வர வேண்டும். பெரிய குடும்பங்கள் தனிக் குடும்பங்கள் தர்மங்களை எடுத்துப் பார்த்து நல்ல முறையில் தங்களுடைய வாழ்க்கையை நடத்துவதற்கு முன்வர வேண்டும். முன் காலத்தில் அப்படித்தான் பெரியவர்கள் தங்களுடைய வாழ்க்கையை நடத்திக் கொண்டு வந்தார்கள். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் செய்யப்பட்டு வந்தன. பழைய காலத்தில் இப்படிப்பட்ட காரியங்களைத் தனிப்பட்ட மனிதர்களும், குடும்பங்களும், சமூகமும், அரசாங்கமும், மடாதிபதிகளும், மற்றவர்களும் செய்துகொண்டு வந்தார்கள். அவைகள் எல்லாம் இப்பொழுது நின்று போய்விட்டன. ஆதலாலே, அடிப்படையை நாம் முதலிலே செப்பனிட வேண்டும். இந்தச் சட்டம் செய்யப்படுவதுடன் கூட, ஹிந்து மத பரிபாலன போர்டு சட்டத்தையும் தகுந்த முறையிலே திருத்தியாக வேண்டும். அதன் மூலமாகப் பெரியவர்களும் தங்களுடைய வாழ்க்கையை நன்றாக நடத்தப் பிரசாரம் செய்வதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும்.

அது மட்டுமல்ல. வறுமையினால் குற்றவாளிகளாக ஆகிறார்களே, அவர்களுக்கு ஒழுக்கத்தையும் சீலத்தையும் கற்பிக்கும்படியான முறையிலேயும் தகுந்த ஏற்பாடுகள் இல்லை. ஏதோ இங்குமங்கும் ராமகிருஷ்ண மிஷன் ஏற்பாடுகள் செய்கிறார்கள், மற்ற மதஸ்தர்கள் செய்கிறார்கள். ஆனால், அவை அதிகமாக இல்லை. அதற்கும் ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும். ஏனென்றால், குழந்தைகள் மாத்திரம் தவறுகள் செய்கின்றன என்று நாம் நினைத்துக்கொண்டு பெரியவர்கள் தவறுகள் அதிகமாகச் செய்வதை நாம் கண்காணிக்காமல், கவனிக்காமல், தகுந்த முறையிலே அவர்களுக்கு தர்மத்தைப் போதிக்காமல் இருந்தால், நாட்டினுடைய நிலைமை நாளாவட்டத்தில் சீர்கேடுதான் அடையும். ஆகையால், ஒழுக்கம் கடவுள் பக்தி அடிப்படையில் வாழ்க்கையை எப்படி நடத்த வேண்டும், கடமையை எப்படிச் செய்ய வேண்டுமென்பதை மக்களுக்கு எடுத்துக் காட்ட அரசாங்கம் கடமைப்பட்டிருக்கிறது. அரசாங்கம் அதை உணருவதில்லை, இந்தக் காலத்திலே. ஆகையால்தான் இந்தத் தொந்தரவு.

பழைய காலத்தில் தனி மனிதனும், சமூகமும் எப்படி நடக்க வேண்டுமென்பதில் வழி காட்டுவதற்குத் தகுந்த ஸ்தாபனங்களும் தனி மனிதர்களும் இருந்தார்கள். பிரம்மச்சரியம், கிரஹஸ்தாசிரமம், வானப்ரஸ்தம், சந்யாசம் முதலிய நிலைகள் படிப்படியாக ஒருவனுக்கு அமைக்கப்பட்டிருந்தன. தனி மனிதர்களும், மதஸ்தர்களும் இந்த வழியில் மக்கள் நடப்பதற்கு வழிகாட்டி வந்திருந்தார்கள். அதனால் அந்தக் காலத்தில் நம்முடைய வாழ்க்கை நன்றாக நடத்தப்பட்டு வந்தது. மடாதிபதிகளும், பெரியவர்களும், மதஸ்தர்களும் அதற்குத் தகுந்த முறையில் மக்களை அவ்வப்போது திருத்திக்கொண்டு வந்தார்கள். தனி மனிதன் தன்னுடைய வாழ்க்கையில் முதலில் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து, அதில் பயிற்சி அடைந்து, பிறகு கிருகஸ்தாசிரமத்தில் பிரவேசித்து, அதிலும்

10th September 1958] [Sri O. P. Ramaswami Reddiar]

நல்ல வாழ்க்கை நடத்தி, அதைக் கடந்து கடவுளைப்பற்றிச் சிந்திக்க வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டு, வானப்ரஸ்தம், சந்யாசம் ஆகிய ஆசிரமங்களில் இருந்து வந்தார்கள். அதெல்லாம் இப்பொழுது போய் விட்டது. ஆகையால்தான், அடிப்படைத் தத்துவத்தை நாம் திரும்பவும் அறிவுறுத்தி, தகுந்த முறையில் ஏதாவது செய்யாமற்போனால் இம் மாதிரி ஆயிரக்கணக்கான சட்டங்களைத்தான் நாம் செய்துகொண்டிருக்க வேண்டும். நான் முதலமைச்சராக இருந்தபோது செய்த சட்டங்கள் எனக்கே தெரியும். எந்த அமைச்சருக்கும், எந்தச் சட்ட நிபுணருக்கும், என்ன சட்டம் என்று தெரியாத அளவில், சட்டங்கள் அதி கரித்துக் கொண்டிருக்கின்றன. எத்தனையோ சட்டங்கள் செய்துகொண்டு வருகிறோம். எங்கே அதிகமாகச் சட்டங்கள் செய்கிறோமோ, அங்கே ஜனங் கள் நன்றாக வாழ்க்கை நடத்தவில்லை என்பதைத்தான் அது சுட்டிக் காட்டுகிறது.

ஜனங்கள் தங்களுடைய பொறி புலன்களை அடக்கி, தகுந்த முறையில் சமூகமும் தனி மனிதனும் வாழ்க்கை நடத்தும் முறையில் இருக்க வேண்டும். சட்டம் எப்பொழுது வரும்? எப்போதைககப்போது தவறுதல் ஏற்படுகிறதோ அப்பொழுதுதான் சட்டம் வரும். ஆதலால், அந்த நிலை மாறுவிட்டால் நாம் முன்னேற முடியாது.

இந்த நாட்டில் வறுமை அதிகமாக இருக்கிறது, அறியாமை அதிகமாக இருக்கிறது, ஆதரிப்போர் இல்லாமல் குழந்தைகள் அநேகமாக ஏழ்மையில் இருக்கிறார்கள். அது மாத்திரமல்ல. தாயோ தந்தையோ இறந்துவிட்டால் அவர்கள் விட்டுச் சென்ற குழந்தைகளைப் பராமரிப்பதற்கும் தகுந்த முறையிலே குழந்தைகளைக் கவனிப்பதற்கும், தகுந்த முறையிலே தனி மனிதனும் இல்லை, சமூகமும் இல்லை. அரசாங்கம் மாத்திரம் இதற்குச் சட்டம் செய்தால் போதாது. ஆகையால், தனி மனிதனும் சமூகமும் அரசாங்கமும் சேர்ந்து இதையெல்லாம் செய்யவேண்டும். அப்படிச் செய்யாமல், சட்டங்களை மாத்திரம் செய்துகொண்டுபோனால், நடைமுறை யில் அதிகத் தொந்தரவுகள், தொல்லைகள்தான் இருந்துகொண்டிருக்கும். ஆகையால், ஒவ்வொருவனும் தன் கடமையை உணர வேண்டும். குற்றம் புரிகின்ற குழந்தைகளை ஆதரிக்க வேண்டியது ஒவ்வொருவருடைய கடமை யாகும் என்பதைத் தனி மனிதனும் சமூகமும் உணரும்படி செய்தா லொழிய, இந்தச் சட்டங்களின் மூலம் நாம் மேல்பூச்சாக எவ்வளவுதான் செய்தாலும் பயன் இல்லை. ஆகையால், அடிப்படையான தத்துவங்களைப் புகுத்த நாம் தகுந்த முறையில் ஏற்பாடு செய்ய வேண்டும். அந்தந்த மதஸ்தர்கள் மூலமாகவோ, சமூக ஸ்தாபனங்கள் மூலமாகவோ இதைச் செய்ய வேண்டும்.

இம்மாதிரி நிலையில் லட்சக்கணக்கான குழந்தைகள் நம் நாட்டில் இருக்கின்றார்கள். நாம் இங்குமங்கும் ஏதோ செய்ய வேண்டுமென்று ஆரம்பித்திருக்கிறோமே தவிர, இந்தப் பிரச்னையை மொத்தமாக எடுத்துக் கொண்டு தீர்வு காணும் முறையில் ஒன்றும் செய்யவில்லை. இப்பொழுது 5-10 p.m.
எத்தனை குழந்தைகள், எங்கெங்கே இருக்கின்றார்கள் என்பதற்கான சர்வே செய்து, புள்ளி விவரங்கள் எடுத்தால், உண்மை நிலை தெரியும். ப்ளாக் டெவலப்மெண்ட் ஆங்காங்கே நடைபெறுகிறது. எல்லா ஊர் களிலும் நிறைய உத்தியோகஸ்தர்களை, எவ்வளவு பேரை "அப்பாயிண்ட்" செய்ய வேண்டுமோ அதைவிட அதிகமாக, "அப்பாயிண்ட்" செய்திருக் கிறோம். அவர்களைக்கொண்டு, நான்கைந்து மாதங்களிலே இந்த சர்வே செய்து முடித்துவிடலாம். எந்தெந்த கிராமத்தில், எந்தெந்த நகரத்தில் பிச்சை எடுக்கும் நிலையில் எத்தனை எத்தனை அனாதைக் குழந்தைகள் இருக்கிறார்கள், ஆதரவற்ற கைம்பெண்கள் இருக்கிறார்கள், அவர்களுக்கு உதவி செய்ய வேண்டிய கடமை சமூகத்திற்கு எவ்வளவு இருக்கிறது என்பதைச் சமூகம் அறிந்துகொள்வதற்காகவாவது இதைச் செய்ய வேண் டும். இந்தப் பொறுப்பைச் சமூகமும் அரசாங்கமும் நிறைவேற்ற முடி யுமோ, முடியாதோ, அதைப்பற்றித் தெரியாது. ஆனாலும், இது விஷ யத்தில் சமூகத்தினுடைய பொறுப்பு எந்த அளவுக்கு இருக்கிறது

என்பதைத் தெரிந்துகொள்வதற்காகவாவது, இத்தகைய சர்வே நடத்தி, எல்லோரும் தங்களுடைய கடமையை உணரும்படி செய்ய வேண்டும். அதன் பிறகு, தனி மனிதன், சமூகம் முன்வந்து, எவ்வளவு தூரம் அவர்களைப் பராமரிப்பதற்குத் தயாராக இருக்கிறார்கள் என்பதை அரசாங்கமும் உணரும். அரசாங்கமும் தங்களால் முடிந்ததைச் செய்ய முடியும். ஆகையால், அந்த முறையிலே ஆரம்பித்தாலொழிய, பிரச்னை என்ன என்பதையும், அதன் அளவு என்ன என்பதையும்கூட தெரிந்துகொள்ளாத நிலைமையில் தான் நாம் இருப்போம். எனக்குத் தெரியும். இன்னும் என்னுடைய குருகுலம் சரியான முறையில் ஆரம்பிக்கப்படவில்லை. ஆனால், அதற்குள்ளாக எத்தனை ஆதரவற்ற குழந்தைகள் வருகிறார்கள், ஆதரவற்ற கைம்பெண்கள் வருகிறார்கள் என்பதை நான் பார்க்கின்றேன். குழந்தைகளைப் பராமரிக்கக்கூட முடியாத நிலையில் தாய் தந்தையர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய குழந்தைகளுக்குச் சாப்பாடு போடக்கூட முடியாமல் இருக்கிறதென்பதைப் பார்க்கும்போது, ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. அப்படி வருகிறவர்களில் நூற்றுக்கு 95 பேர் ரொம்ப ஏழ்மை நிலையில் இருப்பதால், இந்தப் பிரச்னையைச் சமாளிப்பது ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது.

பராமரிப்பற்ற குழந்தைகளையும், ஆதரவற்ற கைம்பெண்களையும், மற்றவர்களையும் தகுந்த முறையில் பரிபாலிக்க வேண்டுமென்றால், அதற்கு இம்மாதிரிச் சட்டங்கள் மூலமாகவும் ஸ்தாபனங்கள் மூலமாகவும் ஏற்பாடு செய்வது தவிர, அவர்கள் அதில் பயிற்சி அடைந்த பிற்பாடு அவர்களை வெளியே விட்டு விட்டால் அவர்களுக்கு எங்கே வேலை இருக்கும் என்பதையும் நாம் கவனிக்க வேண்டியதாக இருக்கிறது. இவர்களுக்கு தர்மத்தையும் ஒழுக்கத்தையும் கடவுள் பக்தியையும் தொழிலையும்பற்றி பயிற்சி கொடுத்து அதன் பிறகு அவர்களுக்கு வேலை எங்கே இருக்கிறதென்பதையும் நாம் கவனித்தாலொழிய திரும்பவும் பழைய நிலைமைதான் வரும். அவர்களுக்கு வசதி இல்லையென்றால் அவர்கள் பல இன்னல்களுக்கு உட்பட்டு, பழையபடி தெருவிலே போகும்படியான நிலையில்தான் அவர்களை சமூகமும் சந்தர்ப்பமும் வைக்கிறது என்று சொல்ல வேண்டும். அவர்களை ஏதோ 20 முதல் 22 வயது வரையில் பராமரித்துவிட்டு, அதன் பிறகு அவர்களை வெளியே விட்டுவிட்டால், அவர்களுக்கு என்ன வசதி இருக்கிறது, சமூகம் எந்தத் துறையிலே அவர்களுக்கு வசதி அளிக்கிறது என்று பார்க்க வேண்டும். இன்னும் தனி மனிதன் எந்த முறையிலே வசதி கொடுக்க முடியும், ஸ்தாபனம் எவ்வளவு கொடுக்க முடியும், அரசாங்கம் எவ்வளவு தூரம் கொடுக்க முடியும், இதையெல்லாம் பார்க்க வேண்டும். சரியான முறையிலே இதை எப்படி நடத்த முடியும் என்பதைப்பற்றி அடிக்கடி சிந்தையிலே தொந்தரவு பண்ணிக்கொண்டிருக்கிறேன். இதை அரசாங்கம் கவனித்து, இந்தச் சட்டத்தைச் செய்வதற்கு முயற்சி செய்திருக்கிறார்கள். இன்னும் மேலும் மேலும் அதிகமாகச் செய்வதற்குத் தனி மனிதனும், குடும்பமும், சமூகத்திற்கு என்ன செய்ய வேண்டும் என்பதைத் தெரிந்துகொள்வதற்கு சர்வே எடுக்க வேண்டும். எவ்வளவு தூரம் செய்ய வேண்டும் என்பதற்காகவாவது, முதலில் சர்வே எடுக்க வேண்டும் என்று சொல்கிறேன். அப்படி எடுத்தால்தான் நாம் செய்ய வேண்டிய பளு எவ்வளவு இருக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ள முடியும். கிராமங்களிலேயும் சர்வே எடுக்க வேண்டும். நகரங்களிலேயும் சர்வே எடுக்க வேண்டும். நகரங்களில்தான் கூக்குரல் அதிகமாக இருக்கிறது. எங்கே நாகரீகம் இருக்கிறதோ அங்கேதான் நரகமும் ஜாஸ்தி, அங்குதான் இழிவான செயல்களும் ஜாஸ்தி. குழந்தைகளைப் பலவிதத்திலேயும் உபயோகப்படுத்தும் பழக்கமும் இருந்துகொண்டு வருகிறது. மனிதன் மிருகமாய்க்கொண்டே போகிறான். நகரங்களுக்கு வந்தால் பிச்சை எடுக்கலாம், அங்கே பல துறைகளிலே வாழ்க்கை நடத்த முடியும் என்ற எண்ணத்துடன் கிராமத்தில் உள்ளவர்கள் நகரத்திற்கு வருகிறார்கள். அங்கே செல்வம் இருக்கிறது, அங்கே அதிக ஜனங்கள் இருக்கிறார்கள், அங்கே அதிகமான சந்தர்ப்பங்களும் (ஆப்பர்ட்ச்யூனிடிகள்) கிடைக்கும் என்றுதான் கிராமத்தவர்கள் நகரத்தை நோக்கி வந்துகொண்டிருக்கிறார்கள்.

10th September 1958] [Sri O. P. Ramaswami Reddiar]

இதையெல்லாம் கவனித்து, பொது ஜனங்களும் தனி மனிதனும் சமூக ஸ்தாபனங்களும் தக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்ளுகின்றேன்.

DEPUTY CHAIRMAN : The hon. Member can take only three minutes.

*DR. A. CHIDAMBARANATHAN : துணைத் தலைவர் அவர்களே, நான் காலத்தினுடைய அருமையை உணருவேன். ஆகையால், சுருக்கமாகச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

இந்த மசோதாவானது பிச்சைக்காரர்களுடைய தொல்லையை நீக்குவதற்கு ஏற்பட்டது அன்று என்பதை நான் நன்ருக உணருகிறேன். ஆனுல், குழந்தைகளும் சிறுவர்களும் பிச்சைக்காரர்கள் ஆகிவிடக் கூடாது என்ற நோக்கத்திலேதான் இம்மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பதையும் உணருகிறேன்.

ஆனுல், குழந்தைகள் பிச்சைக்காரர்களாக உலவுகிருர்கள் என்ற கருத்திலை அவர்களைப் போலீஸ்காரர்கள் பிடித்து, சில நேரங்களிலே கோர்ட்டுக்கும் இழுத்து வீணுகத் தண்டனைக்கு ஆளாக்கிவிடுவார்களோ என்ற ஐயம் இருக்கிறது. அவ்வாறு சட்டத்தைச் செயற்படுத்தும்போது மிகவும் கவனமாகவும் எச்சரிக்கையாகவும் செயற்படுத்த வேண்டிய நிலைமை இருக்கிறது என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் நன்ருக அறிவார்கள். அதைப்பற்றி விளக்கமாக, தனியாக, போலீஸ்காரர்களுக்கு உத்தரவுகள், ஆணைகள் பிறப்பிக்கப்படும் என்று நான் நம்புகிறேன்.

மேனுடுகளில் பிச்சைக்காரர்களே இல்லை என்ற நம்பிக்கையில் சிலர் பேசினுர்கள். மேனுடுகளில் பிச்சைக்காரர்கள் இல்லையென்ருல், அங்கே எவ்வளவு தூரம் மக்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறது என்பதை நாம் கவனிக்க வேண்டும். வாழ்க்கைத்தரத்தை ஏதோ ஓரளவுக்குத்தான் நாம் உயர்த்திக்கொண்டு வருகிறபோது, பிச்சை யெடுக்கும் பிள்ளைகளைப் பிடித்து இழுத்துச் சிறையிலே வைப்போமா அல்லது வேறு இடத்திலே அடைத்து வைப்போமா என்பதை நாம் சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த மசோதாவில் '16 வயதிலிருந்து 18 வயதுக்குட்பட்ட சிறு பையன்கள் கடன் வாங்கினுல் குற்றம், அதன் காரணமாகக் கோர்ட்டுக்கு இழுக்கப்படலாம்' என்று ஒரு பிரிவு சொல்கிறது. பதினுறு வயதிலிருந்து 18 வயதுக்குட்பட்ட சிறுவர்கள் கடன் வாங்கினுல், அதன் காரணமாக அவர்கள் கோர்ட்டுக்கு இழுக்கப்பட்டு தண்டிக்கப்படுவது என்ருல், அது எவ்வளவு மோசமான நிலையாக இருக்கும் என்பதை நாம் சிந்திக்க வேண்டும். பிச்சை எடுப்பதை வேண்டுமானுல் தடுக்க ஏதாவது செய்யலாம். ஆனுல், பள்ளிக்கூடத்தில் படிக்கும் ஒரு சிறுவன் ஒன்று அல்லது இரண்டு ரூபாய் கடன் வாங்கினுன் என்ருல், அதைத் தன் தந்தையிடமிருந்து கேட்டுப் பெற்றுத் திருப்பிக் கொடுத்துவிடப் போகிருன். அப்படியிருக்கும்போது கடன் வாங்கினுலும் குற்றம் என்று சொல்வது அவ்வளவு சரியன்று. "Borrowing is an offence under this Bill." ஆதலினுலேதான், அதை விட்டுவிடுவதைப்பற்றி அரசாங்கம் சிந்திக்க வேண்டும். நான் தனியாக இதுபற்றித் திருத்தம் கொடுக்கவில்லையென்ருலும், இந்தச் சட்டத்தை நடைமுறையில் செயற்படுத்துகிறபோது மிக எச்சரிக்கையாகக் கவனம் செலுத்தி, வெகு ஜாக்கிரதையாக இருக்கும்படி பிரத்தியேகமான உத்தரவுகள் பிறப்பிக்குமாறு கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த மசோதாவை நான் வரவேற்கிறேன்.

SRI M. SESHACHARIAR : Mr. Deputy Chairman, Sir, I want to refer to one or two matters only, as others have already spoken about other matters. In regard to criminal offences, it so happens that we have got to prove beyond reasonable doubt that

[Sri M. Seshachariar] [10th September 1958

the offender has committed the crime. What happens in the juvenile courts in the mufassal—it may be otherwise in the courts in the Madras City—is this. There are only a Judge and the District Probation Officer and no one else. The Judge is the prosecutor as well as the defender. Actually the Probation Officers comes to the rescue of the child. Therefore, in the courts where there is an enquiry, there ought to be some kind of cross-examination. It may be that the instigator who has instigated the child to commit the crime may cleverly manoeuvre to put in his own witnesses before the court, there is no question of cross-examination arising there. Therefore, there must be a public defender. In that connection, we have suggested that the officers concerned should not wear robes, that there should be no prosecutor and that the Police also should not come in their uniforms.

The other matter that I wish to refer to relates to destitutes. We have to establish that a person is a destitute before we put him in the reformatory as we have got *habeas corpus* and other writs. It is for us to see that he is kept separate from other approved schools, as they would say. We are all anxious to see that they are kept separate. But there is no purpose in our keep-
5-20 p.m. ing them along with the delinquents. It will surely accelerate the criminal propensities in the child. I would, therefore, submit, Sir, that we must surely keep them separate from the delinquents in the reformatory.

The other thing that I would like to say is about the probation officer. I find that the probation officers are all anxious to do something in the matter. But the probation officers are not proficient enough to handle the matter. They are not competent; they are only a little educated. They are not capable of understanding the children and classifying them before they submit their reports to the courts. It so happens unfortunately in the case of criminal courts that the report of the probation officer is placed before the court even before a decision is given by the judge. An adverse report may turn the scales against the child. Therefore, we have to be wary in regard to this. What I would like to suggest is that the probation officers must be competent and proficient enough. One probation officer attends four or five courts in four or five taluks. He has to submit thirty or forty reports. We cannot expect all the reports to be clear and complete. They cannot be useful in any manner. I would suggest, therefore, that more probation officers should be appointed and that they must be proficient enough to understand the psychology of the child and also to suggest ways and means for rehabilitating the child.

*SRI B. K. NALLASWAMI : மன்ற உதவித் தலைவர் அவர்களே, இந்த மசோதாவின் மீது பல அறிஞர்கள் பேசிவிட்டார்கள். எனக்குப் பேச சந்தர்ப்பம் இல்லை என்று நினைத்துக்கொண்டிருக்கிற சந்தர்ப்பத்திலே நான் அழைக்கப்பட்டிருக்கிறேன். இந்தச் சட்டத்தை அமுல் செய்வதில் கஷ்டங்கள் அதிகமாக இருக்கும் என்பதை நான் உணருகிறேன். நானும் சிறுவர்களைக் கொண்ட ஹாஸ்டலை நடத்திய அனுபவம் பெற்றிருக்கிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி பேசும்போது எனக்குத் திகைப்பாக இருந்தது. மனோதத்துவ நிபுணர்களுக்கு இதில் இடம் கிடையாது

என்று அவர் சொல்லும்போது, எவ்வளவு தூரம் நம்முடைய இந்த மசோதா வெற்றிபெறும் என்பதிலே எனக்கு ஒரு பெரிய சந்தேகம் ஏற்பட்டது. ஏனென்றால் முன்னமே ஒரு அங்கத்தினர்

"தக்கார் தகவிலர் என்ப தவரவர்தம்
எச்சத்தாற் காணப்படும்"

என்ற குறளை மேற்கோள் காட்டினார். பெற்றோர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை அவர்களுடைய குழந்தைகளைக்கொண்டு அறியலாம் என்பதுதான் அதன் கருத்து. குழந்தைகள் வாழ்க்கை பெற்றோர்களுடைய வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருக்கிறது என்பதுதான் அந்தக் குறளின் ஆழ்ந்த கருத்து. குழந்தைகளின் சூழ்நிலை இன்று எப்படி இருக்கிறதோ அதை அனுசரித்துத்தான் அவர்கள் குற்றவாளி களாகவும் குறைபாடுள்ளவர்களாகவும் ஆகிக்கொண்டிருக்கிறார்கள் என்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிந்த விஷயம்.

சர்ட்டிபைட் ஸ்கூல்கள் நல்ல வேலை செய்கின்றன. ஆனால் டாக்டர் முதலியார் அவர்கள் சொன்னதுபோல் சர்ட்டிபைட் ஸ்கூல்கள் அவற்றில் செல்லக்கூடிய குழந்தைகள் இன்னும் புதிய குற்றங்களைக் கற்றுக்கொண்டு வரும் அளவிலே இன்று வரையில் இருக்கின்றன என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். சிறை அனுபவம் எனக்கு ரொம்ப இருக் கிறது. சிறையில் இருக்கும்போது இதைப்பற்றியெல்லாம் மற்றக் கைதி களுடன் விவாதித்திருக்கிறேன். அந்த முறையிலே முதல் குற்றவாளிகளை இம்மாதிரிப் பள்ளிகளில் அனுப்புவது ரொம்ப ஆபத்தான விஷயம் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

தனிப்பட்ட நபர்கள் இந்தக் குழந்தைகளை எடுத்துக்கொண்டு சீர் திருத்துவதைப்பற்றி ஒரு அங்கத்தினரும் குறிப்பிடவில்லை. அங்கே அதிக கவனம் செலுத்தவில்லை என்றுதான் நான் கருதுகிறேன். முதல் குற்ற வாளிகளைத் தனிப்பட்ட நபர்களோ அல்லது ஆசிரமங்களோ எடுத்துக் கொண்டு திருத்த முன்வருவதுதான் உசிதமான விஷயம். ஸ்ரீமதி க்ளப்வாலா ஜாதவ் அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தத்தை நான் மிகவும் ஆதரிக்கிறேன். மனோ தத்துவ நிபுணர்கள் இல்லாத சமயத்தில் ஒரு தனி நபர் கோர்ட்டை வைத்துக்கொண்டிருக்கிறோம். இதைச் சிறிது கூர்ந்து கவனிக்க வேண்டும். ஒரு கோர்ட்டு மனோ தத்துவ சாஸ்திரியாக இருக்க முடியாது என்ற அடிப்படையை வைத்துக்கொண்டு பார்த்தால், நன்றாகப் பயிற்சி பெற்று, அந்தக் குழந்தைகளைச் சீர்திருத்துவதில் அனுபவம் பெற்ற ஒரு கமிட்டி இருந்து யோசனை சொல்வதுதான் சிறந்தது என்பதை யாரும் ஒப்புக்கொள்வார்கள். ஸ்ரீமதி ஜாதவ் அவர் கள் நினைப்பது போன்ற காரணத்திற்காக நான் அதை ஆதரிக்கவில்லை. கோர்ட்டு என்ற சொல்லால் குழந்தைகளுக்கு இழிவு ஏற்பட்டு விடும் என்ற காரணத்திற்காக அதை நான் ஆதரிக்கவில்லை. மனோ தத்துவ நிபுணர் கள் கிடைக்காத நிலையில் பயிற்சி பெற்ற ஒரு சிலரைக் கொண்டு கோர்ட்டுக்கு ஆலோசனை கூறி குழந்தைகளைத் திருத்துவதுபற்றி முடிவு செய்வது மிகவும் உபயோககரமாக இருக்கும் என்ற நிலையிலே அதை நான் ஆதரிக்கிறேன். வேறு காரணத்திற்காக நான் ஆதரிக்கிறேன் என் பதை மிகவும் பணிவுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த நிலையிலே நம்முடைய நாட்டில் மனோ தத்துவ சாஸ்திரிகள் குறைவு என்று கருதினால் அது தவறு. என்னுடைய அனுபவம் வேறு. நம்முடைய நாட்டில் யோகிகள் இருக்கிறார்கள். நம்முடைய மனதில் என்ன இருக்கிறது என்பதைக்கூடச் சொல்லக்கூடிய சந்நியாசிகளுடன் நான் பழகியிருக்கிறேன். நம்முடைய எண்ணங்கள், நம்முடைய பூர்வ சம்ஸ்காரங்களைக்கூட அறிந்துகொள்ளக்கூடிய சக்தியுடையவர்கள் இன் னும் நம் நாட்டில் குறைந்துவிடவில்லை. அவர்கள் போன்றவர்கள் இந்தப் பணியை எடுத்துக்கொண்டு நடத்தலாம். அரசாங்கம் இவர்களைப் பயன் படுத்திக்கொள்ள வேண்டும். நம்முடைய நாட்டில் மனோ தத்துவ சாஸ்திரிகள் இல்லை என்று கருதி டாக்டர்களையும் நிபுணர்களையும் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியதில்லை.

இது வரைக்கும் சர்க்கார் கடைப்பிடிக்கும் கொள்கை மடங்களிலோ தர்ம ஸ்தாபனங்களிலோ இந்த அனாதைக் குழந்தைகள் விடுதிகளை ஏற்படுத்திக்கொள்வதற்குத் தடையாக நம்முடைய சட்டங்களும் விதி முறைகளும் இருந்துகொண்டிருக்கின்றன. எங்களுடைய தாலூகாவில் ஒரு அனாதைக் குழந்தைகள் ஆசிரமம் ஏற்படுத்துவதற்கு ராஜாஜி அவர்கள் கால் கோலினார்கள். இப்பொழுது மூன்று வருஷமான பிறகும் கட்டடம் கூட எழுப்பப்படவில்லை. காரணம் ஒரு வேலையும் நடத்த முடியாத நிலையில் நம்முடைய எண்டோமெண்ட் சட்டங்கள் குறுக்கிடுகின்றன. ஆகையால், இவைகளையெல்லாம் திருத்தி, குழந்தைகள் முதலில் அதிகமாகக் குற்றங்கள் செய்வதற்கு வழி இல்லாமல் செய்ய வேண்டும். அடுத்தபடி, குழந்தை பிச்சை எடுக்கக் கூடாது என்பது சரியல்ல என்று நான் கருதுகிறேன். பெரியவர்கள் பிச்சை எடுப்பதைப் பார்த்துக்கொண்டு சிறியவர்கள் இன்னது செய்கிறோம் என்று தெரியாமல் கை நீட்டிக் காசு வாங்கும் பழக்கத்தில் வந்துவிடுவதை நம்முடைய நாட்டில் தெருவில் பார்க்கிறோம். கையை நீட்டி காலணா அரையணா வாங்கும் பழக்கம் குழந்தைகளிடம் இருக்கிறது. பெற்றோர்களுக்குத் தெரியாமல் பிச்சை எடுக்கப் போகும் குழந்தைகளும் இருக்கிறார்கள்.

பிச்சை எடுப்பது என்று சொன்னால் உண்மையான சந்நியாசிகளுக்கு இடையூறு வந்துவிடும் என்று இன்னொரு அங்கத்தினர் சொன்னார். சந்நியாசிகளுக்கு ஒரு இடையூறும் வராது. உண்மையிலேயே மதுக்கரி பிச்சை எடுக்கும் உண்மை சந்நியாசிகளைப் பார்க்கும்போதே மக்கள் புரிந்துகொண்டு விடுவார்கள். இந்தச் சட்டம் பாலர்களுக்கானது. பதி னெட்டு வயது பால சந்நியாசிகளை நான் பார்த்ததில்லை. அப்படிப்பட்ட வர்கள் ரொம்பவும் அபூர்வம். பதினெட்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட சந்நியாசி களுக்கு ஏதோ பாதகம் வந்துவிடும், ஆகையால் பிச்சை எடுப்பதைத் தடுக்கக் கூடாது என்று சொல்வதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. பிச்சை எடுப்பதைத் தடுக்கத்தான் வேண்டும். ஆனால் பெரியவர்கள் பிச்சை எடுப்பதைத் தடுக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன். ஏனென்றால் பெரியவர்கள் செய்வதைப் பார்த்துத்தான் சிறியவர்களும் பிச்சை எடுக்கப் பழகிக்கொள்கிறார்கள். இதற்கு ஒரு உதாரணம் சொல்லலாம். பெரிய வர்கள் பீடி அல்லது சிகரெட் குடித்து விட்டு எறிந்துவிட்ட துண்டுகளை எடுத்து சிறுவர்கள் குடிப்பதை நாம் பார்த்திருக்கிறோம். இம்மாதிரித் தான் பெரியவர்களுடைய பழக்கம் சிறுவர்களுக்கும் வந்துவிடுகிறது. ஆகையால் இதை அடிப்படையாக வைத்துக்கொண்டு நம் குழந்தைகளை ஆசிரமங்களில் நல்ல மனோ தத்துவம் தெரிந்த சந்நியாசிகளிடம் ஒப் படைப்பது குழந்தைகளுக்கு நன்மை பயக்கக்கூடும். இப்பொழுதும் ராம கிருஷ்ண மிஷன் போன்ற ஸ்தாபனங்கள் இப்பணியில் ஓரளவு ஈடு பட்டிருக்கின்றனர். அப்படிப்பட்ட ஆசிரமங்களுக்குக் குழந்தைகளை அனுப்பு வதற்கும் அவைகளுக்கு வேண்டிய வசதிகளையும் சர்க்கார் செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த மசோதாவை ஆதரித்து என் னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்,

5-30 p.m. *THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் துணைத் தலைவர் அவர்களே, இந்த விவாதத்திலே கலந்துகொண்ட அங்கத் தினர்கள் அனைவருக்கும் முதன் முதலாக என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். குழந்தைகளைத் திருத்தும் விஷயத்தில், பரா மரிக்கும் விஷயத்தில் எவ்வளவு கவனம் செலுத்த வேண்டும் என்பது கனம் அங்கத்தினர்கள் எல்லோராலும் வற்புறுத்தப்பட்டது. அது மிகவும் அவசியம் என்பதை நான் முதலிலேயே ஒப்புக்கொள்ளுகிறேன். இந்தச் சட்டம் செய்வதினாலேயே மட்டும் இந்த மகத்தான பிரச்னையை நாம் தீர்த்துவிட முடியாது என்பதை அரசாங்கமும் உணர்ந்துதான் இருக்கிறது. சட்டம் செய்துவிட்டால் மட்டும் கடமை தீர்ந்து போய்விடும் என்று அரசாங்கம் கருதவில்லை. ஆனால் சட்டத்தின் அடிப்படையில் சில உருப் படியான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றால் அதற்கு

10th September 1958] [Sri M. Bhaktavatsalam]

வேண்டிய அதிகாரம் வேண்டும், அதற்கு வேண்டிய சட்டம் வேண்டும். அந்த வகையில்தான் இந்த மசோதா பழைய சட்டத்தை மாற்றியமைக்கும் மசோதாவாக இங்கே கொண்டுவரப்பட்டிருக்கிறது.

மற்றொன்று, குற்றம் செய்தவர்களைத் தண்டிப்பது மட்டுமல்ல, குற்றம் செய்வதற்கு முன்னமேயே தடுப்பு நடவடிக்கைகள் அதாவது 'ப்ரிவெண்டிவ்' நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டியதும் அவசியம் என்பதை அரசாங்கம் நன்றாக உணர்ந்துதான் இருக்கிறது. குற்றம் செய்வதைத் தடுப்பதற்கான நடவடிக்கைகளைச் சட்டத்திலுல் எடுக்க முடியாது. அது பொது மக்கள் கையில் இருக்கிறது. முக்கியமாகக் குழந்தைகள் கெடுவதற்குக் காரணம் வறுமைதான் என்பதை ஒப்புக்கொள்ள முடியாது. ஏனென்றால் பெரிய பணக்காரக் குடும்பங்களிலுள்ள குழந்தைகளும் கெட்டுப்போவதை நாம் பார்க்கின்றோம். ஸ்ரீமான் ராமசாமி ரெட்டியார் அவர்கள் சொன்னதுபோல் குழந்தைகளைப் பெற்றோர்கள் கவனிக்காமல் இருப்பதும் அவர்கள் கெடுவதற்குக் காரணமாக அமைகிறது. பெரிய குடும்பங்களாக இருந்தாலும் ஏழைக் குடும்பங்களாக இருந்தாலும் பெரியவர்கள் கவனிப்பு இல்லாத காரணத்தால்தான் குழந்தைகள் பெரும்பாலும் கெட்டுவிடுகிறார்கள்.

பெற்றோர்கள் கவனிக்காத குழந்தைகளைத் தனி நபரிடம் விட வேண்டும் என்று கனம் அங்கத்தினர் ஒருவர் சொன்னார். அவர்கள்தான் எப்படிக் குழந்தைகளைக் கவனிக்கப் போகிறார்கள்? இந்த மசோதா நன்றாகப் பரிசீலனை செய்யப்பட்டுத் தயாரிக்கப்பட்டது. இந்தச் சட்ட சபையில் பிரேரேபிக்கப்பட்டு இரண்டு சபைகளின் பிரதிநிதிகள் அடங்கிய ஜாயிண்ட் செலெக்ட் கமிட்டியினிடம் ஒப்புவிக்கப்பட்டு அந்தக் கமிட்டி ரொம்ப கவனத்துடன் பல நாட்கள் ஆலோசித்த பிறகு ஒவ்வொரு பிரிவாகப் பரிசீலனை செய்துதான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறார்கள். இருந்தாலும் அந்த செலெக்ட் கமிட்டியில் இல்லாத கனம் அங்கத்தினர் ஸ்ரீ பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் போன்றவர்கள் ஏதோ சில திருத்தங்கள் செய்ய வேண்டும் என்று அவர்களுக்குப் பட்டுத் திருத்தங்கள் கொண்டுவந்தால், அந்தத் திருத்தங்களை ஒப்புக்கொள்ளுவதில்லை என்ற சித்தாந்தம் ஒன்றுமில்லை. என்னைப் பொறுத்த மட்டில் ஒப்புக்கொள்ளக்கூடிய திருத்தம் ஏதாவது பிரேரேபிக்கப்பட்டால், அதை நான் நிச்சயமாக ஒப்புக்கொள்வேன். எனக்கு இதில் ஒரு சிரமமும் இல்லை. ஏனென்றால் சட்ட சபை இந்த மாதக் கடைசி வரையில் நடக்கப் போகிறது. இங்கே ஏதாவது திருத்தங்கள் கொண்டுவந்து நிறைவேற்றினாலும் மீண்டும் அந்தச் சபைக்குப் போய் அதனுடைய அங்கீகாரத்தையும் வாங்கி வருவதில் சிரமம் இல்லை. ஆகவே திருத்தங்கள் ஒன்றையும் ஒப்புக்கொள்ளக்கூடாது என்ற பிடிவாதம் இல்லை.

குழந்தைகள் பிச்சை எடுப்பதுபற்றியும் கடன் வாங்கக்கூடாது என்பது பற்றியும், அதற்குத் தடை இருக்கிறது என்பதைப்பற்றியும் கனம் அங்கத்தினர்கள் பேசினார்கள். இந்த மசோதாவில் குழந்தைகள் பிச்சை எடுப்பதைக் குற்றமாகக் கருதவில்லை. அது "ப்ரிவென்ஷன் ஆப் பெக்கிங் ஆக்ட்" இல் வருகிறது. இந்த மசோதாவில் "**Employing children and young persons for begging**" என்று இருக்கிறது. அதாவது பிச்சை எடுப்பதற்கு யார் குழந்தைகளைத் தங்களுக்குக் கருவியாக உபயோகப்படுத்திக்கொள்ளுகிறார்களோ அவர்களைத்தான் தண்டிக்க வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

குழந்தைகள் கடன் வாங்குவதுகூடத் தப்பா என்று சில கனம் அங்கத்தினர்கள் கேட்டார்கள். குழந்தைகள் கடன் வாங்குவதைக் குற்றம் என்று சொல்வது தவறுதான். இந்த மசோதாவில் "**Inciting child or young person to bet or borrow**" என்றுதான் இருக்கிறது. எவ்வளவு வேண்டுமானாலும் கடன் வாங்கிக்கொள்ளட்டும், அதைத் திருப்பிக் கொடுக்கட்டும். ஆனால் ஏன் குழந்தைகளை மற்றவர்கள் இதற்கு உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டும்? தான் கடன் வாங்குவதற்காகக்

[Sri M. Bhaktavatsalam] [10th September 1958

குழந்தைகளை உபயோகப்படுத்துவதுதான் பெரிய குற்றமாகக் கருதப்படுகிறது. அற்குத்தான் தண்டனை. குழந்தைகள் கடன் வாங்குவதில்லை. இந்த மசோதாவின் அடிப்படையே அதுதான். குழந்தைகளைப் பிச்சை எடுக்கவோ, மற்ற தீயக் காரியங்களைச் செய்யவோ பயன்படுத்துகிறார்களே அவர்களைத் தண்டிக்க வேண்டுமென்பதுதான் இந்த மசோதாவின் அடிப்படை.

இப்படிப்பட்ட குழந்தைகளை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். சூழ்நிலை காரணமாகக் குற்றம் செய்யக்கூடிய குழந்தைகள் இருக்கிறார்கள். ஆனால் திக்கற்றவர்கள் இருக்கிறார்களே அவர்களுக்கும் சூழ்நிலைதான் காரணம். அது குழந்தைகளுடைய பொறுப்பு அல்ல. இவர்களைத் தனித் தனியாக வைத்துப்பராமரிக்க வேண்டுமென்ற அடிப்படையான கொள்கையை அரசாங்கம் ஒத்துக்கொண்டிருக்கிறது. அந்த வகையில் ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியது அவசியம். இந்த மசோதாவில் அதைப்பற்றிக் குறிப்பிடவில்லை என்றாலும், சாதாரணமாகக் குற்றம் செய்கிறவர்கள், தொத்து வியாதி உள்ளவர்கள் இப்படிப்பட்டவர்களைத் தனித்தனியாக "ஹோமில்" வைப்பது என்று இந்த மசோதாவில் இருப்பதைக் கனம் அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள். "சர்ட்டிபைட் ஸ்கூல்" கட்டப்படுகிறது என்று பொதுவாகச் சொல்வதில் பயன் இல்லை. கனம் அங்கத்தினர் ஸ்ரீ நல்லசாமி அவர்கள் தம்முடைய சிறை அனுபவத்தைப்பற்றிச் சொன்னார்கள். நான் சொல்லுகிறேன், அவருக்குச் சிறைவாச அனுபவம்தான் இருக்கிறது, சர்ட்டிபைட் ஸ்கூலிலே அனுபவம் இருந்ததாக நான் நினைக்கவில்லை. அவருக்கு "சர்ட்டிபைட் ஸ்கூல்" அனுபவம் இருந்ததில்லை. ஆகவே இது இரண்டையும் ஒரே மாதிரியாகச் சொல்வதில் பயனில்லை. சர்ட்டிபைட் ஸ்கூலிலிருந்து வருகின்ற குழந்தைகள் திருந்திக்கொண்டு தான் வருகிறார்கள், அங்கு இருப்பதால் கெட்டுப்போகிறார்கள் என்று பொதுவாகச் சொல்வதில் பயனில்லை.

SRI B. K. NALLASWAMI : நான் முதல் குற்றவாளிகளைப் பற்றிக் குறிப்பிட்டேன்.

*THE HON. SRI M. BHAKTAVATSALAM : முதல் குற்றவாளிகளைக்கூடத் தகுந்தபடிதான் கவனிக்க வேண்டும். மனோ தத்துவ நிபுணர்களைக்கொண்டு குழந்தைகளின் மனோ நிலையைப் பார்க்க வேண்டும். இது முக்கியம் என்பதை இந்த அரசாங்கம் கொஞ்ச காலத்திற்கு முன்பாகவே உணர்ந்திருக்கிறது. ஒரு நிபுணரையும் நியமித்திருக்கிறது.
5-40 p.m. ப்ரசிடென்சி கல்லூரியில் ஒரு ஆசிரியர் அப்படி நியமிக்கப்பட்டிருக்கிறார். அது மட்டுமல்ல, "ஜுவனைல் கைடன்ஸ் பியூரோ" ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு குழந்தையினுடைய மனோ நிலையையும் நன்றாக ஆராய்ந்து அதற்கு ஏற்றவாறு குழந்தைகள் கவனிக்கப்பட வேண்டும் என்று அரசாங்கம் ஒப்புக்கொண்டிருக்கிறது. அதில் கவனம் செலுத்திக் கொண்டும் வருகிறது. மனோ தத்துவ நிபுணர்கள் யாரும் இல்லை என்று சொல்வது சரியல்ல. ஏதோ ஆசிரமங்களைக் கட்டி அவைகளிலே குழந்தைகளை வைத்துவிடுவதால் மட்டும் மனோ நிலை வந்து விடும் என்று சொல்லி விட முடியாது. இதற்கு நிபுணத்துவம் வேண்டும், அனுபவம் வேண்டும், படிப்பு வேண்டும். புத்தகப் படிப்பு மட்டும் அல்ல ; நேரடியான அனுபவமும் வேண்டும். அப்படிப்பட்ட உதவி அரசாங்கத்திற்கு இருக்கிறது. அந்த உதவியை இன்னும் விரிவாக்க வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம்.

திக்கற்ற குழந்தைகளைக் கவனிக்கும் ஆர்பனேஜ்களை சில மத ஸ்தாபனங்கள் வைத்து நடத்துவதிலே மத பரிபாலனச் சட்டம் குறுக்கே நிற்பதாக ஒரு அங்கத்தினர் குறிப்பிட்டார். பல அற நிலையங்கள் இத்தகைய ஸ்தாபனங்களை நடத்திக்கொண்டு வருகின்றன. அதற்கு ஒன்றும் தடை எழுப்பவில்லை, தடை எழுப்புவதற்கும் இல்லை. இப்படிப்பட்ட திக்கற்ற குழந்தைகளைப் பராமரிப்பது பகவானுக்கு மிகவும் உகந்தது என்பதைச் சிறந்த ஆஸ்திகராகிய நண்பர் ஸ்ரீ பாலசுப்ரமண்ய அய்யர்

10th September 1958] [Sri M. Bhaktavatsalam]

அவர்களும் ஒப்புக்கொள்ளுவார்கள். சில இடங்களில் விரிவாக்கப்பட வில்லேயானுல் அதற்கு வேறு காரணங்கள் இருக்கலாமே தவிர சட்டமோ, விதியோ குறுக்கே நிற்கவில்லே என்பதை மட்டும் இந்தச் சமயத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

சட்டம் செய்தால் மட்டும் போதாது. பெற்ருேர்களும் போதிய கவனம் செலுத்த வேண்டும். பொது மக்களுடைய உதவியும் ஒருபுறம் இருக்க, பெற்ருேர்களும் தங்களுடைய குழந்தைகளே நன்ருகக் கவனிக்க வேண்டும் என்பதற்காக பொது ஜன அபிப்பிராயம் திரட்டப்பட வேண்டும். அதுதான் முக்கியமானது.

சிறுவர்கள் புகை பிடிப்பதுபற்றிக் குறிப்பிடப்பட்டது. நாம் சட்டம் செய்வதினுல் என்ன பயன் என்றும் கேட்கப்பட்டது. கூடிய வரையில் நிறைவேற்றப்படக்கூடிய சட்டங்களேத்தான் அரசாங்கம் செய்து வருகிருர்கள். வெறும் எட்டுச் சுரைக்காய்ச் சட்டங்களேச் செய்வதில்லே. அப்படிச் செய்யப்பட்டிருக்கிறது என்று சொன்னுல், அதற்கு அரசாங்கம் மட்டும் பொறுப்பாளி அல்ல, இந்தச் சட்ட சபையிலுள்ளவர்கள் எல்லோருமேதான் பொறுப்பாளியாவார்கள். அப்படிச் சொல்வது சட்ட சபையைப் பாதிக்கும்; நடைமுறையில் நிறைவேற்ற முடியாத சட்டங்களேத்தான் நாம் செய்தவர்களாகவும் ஆவோம். அப்படிப்பட்ட அபிப்பிராயத்திற்குக் கனம் அங்கத்தினர்கள் யாரும் இடம் கொடுக்க மாட்டார்கள் என்றுதான் நான் நம்புகிறேன். ஆனுல் புகை பிடிப்பதைத் தடுக்கச் சட்டம் செய்வதில் பயன் இல்லே. இதைப்பற்றி நாங்கள் பரிசீலனே செய்து பார்த்தோம். பள்ளிக்கூடம் போகும் குழந்தைகள் புகை பிடிப்பதைத் தடுப்பதற்கு என்ன வழி என்று யோசித்துப் பார்த்தால், பெற்ருேர்கள்தான் அவர்களுக்கு வழி காட்டியாக இருக்க வேண்டும். குழந்தைப் பருவத்திலிருந்தே பெற்ருேர்களுடைய இந்தப் பழக்கத்தைப் பார்த்துக் கொண்டிருந்து பிறகு குழந்தைகளும் புகை பிடிக்க ஆரம்பிக்கிருர்கள். இது பெரும்பாலும் பள்ளிக்கூடத்திற்கு வெளியிலேதான் நடைபெறுகிறது. இந்தப் பழக்கத்தைக் குழந்தைகள் விட வேண்டும். இதுபற்றி செலெக்ட் கமிட்டியிலும் யோசனே கூறப்பட்டது. இதற்கு எந்தச் சட்டம் செய்தும் பயனில்லே என்ற கருத்தில் தான் ஜாயிண்ட் செலெக்ட் கமிட்டியில் ஒப்புக்கொள்ளப்படவில்லே.

ஸ்ரீமதி ஜதாவ் அவர்கள் தம்முடைய நீண்ட அனுபவம், உத்சாகம், அக்கறை இவைகளேக்கொண்டு ஜாயிண்ட் செலெக்ட் கமிட்டியில் பல யோசனேகளேத் தெரிவித்தார்கள். ஜுவனேல் கோர்ட் என்பது கூடாது என்று அவர்கள் சொன்னுர்கள். பெயரில் என்ன இருக்கிறது? இந்தக் கோர்ட்டை நடத்துகிறவர்கள் மாஜிஸ்ட்ரேட்டுகள் அல்ல. "கோர்ட்" என்ற பெயர் இருக்கலாம். ஆனுல் "கோர்ட்" என்னும் ஆங்கிலப் பதத்திற்கு எத்தனேயோ அர்த்தங்கள் இருக்கின்றன.

**SRI K. BALASUBRAMANYA AYYAR**: "கோர்ட்" பண்ணுவது என்று கூட ஒரு அர்த்தம் இருக்கிறது. (சிரிப்பு.)

***THE HON. SRI M. BHAKTAVATSALAM**: இதில் சிறந்த சமூக சேவகிகள், பெண்மணிகள் எல்லாம் இருக்கிருர்கள். இந்தச் சட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பது என்னவென்ருல் ஒரே கோர்ட்டில் விசாரிக்கக் கூடாது; இடம், சமயம், இவைகளேயொட்டி வெவ்வேறு இடங்களில் விசாரணே நடத்த வேண்டும் என்பதுதான். தீர யோசித்துத் தான் இந்த முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஸ்ரீமதி ஜதாவ் அவர்கள் இதை ஏற்றுக்கொண்டு தங்களுடைய திருத்தப் பிரேரணேயை வற்புறுத்த மாட்டார்கள் என்று நான் நம்புகிறேன்.

மற்றப்படி இன்னும் ஒன்றிரண்டு யோசனேகள் தெரிவிக்கப்பட்டன. இது சட்டமாக்கப்பட்ட பிறகு, ஸ்ரீமான் பாலசுப்ரமணிய அய்யர் சொன்னது போல, மத்திய சர்க்காரின் அங்கீகாரத்தைப் பெறலாம். அதைப்பற்றி சிரமம் இல்லே, அதை நாங்கள் உணர்ந்துதான் இருக்கிறேம். இங்கே குறிப்பிட்ட சில யோசனேகளே இது சம்பந்தமான விதிகள் செய்யும்போது

கவனித்துக்கொள்ளலாம். மற்றப்படி கனம் அங்கத்தினர்களுக்குக் குழந்தைகள் விஷயத்தில் எவ்வளவு ஆவலும் கவலையும் இருக்கிறதோ அதே ஆவலோடும், கவலையோடும்தான் இந்த மசோதாவை அரசாங்கம் தயாரித்திருக்கிறது. இந்த் மசோதா இங்கே நிறைவேற்றப்படுமானால் இதன் மூலம் நம்முடைய நாட்டின் சிறந்த செல்வங்களாகிய குழந்தைகளைப் பாதுகாத்துப் பராமரித்துத் திருத்துவதற்கு உதவ முடியும் என்று நான் நம்புகிறேன். இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் நம்முடைய சமுதாயத்தில் ஏற்பட்டிருக்கும் பேராபத்தை அகற்றக்கூடிய நிலைமை ஓரளவு ஏற்படும், அதோடு மக்களுக்கும் குழந்தைகள் விஷயத்தில் புதிய அக்கறை ஏற்பட்டு இந்தப் பிரச்னையை நாம் சுமுகமாகவும் வெற்றிகரமாகவும் தீர்ப்போம் என்ற நம்பிக்கையோடு இந்த மசோதாவை கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் ஆதரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

5-50 p.m. DEPUTY CHAIRMAN : The question is—

'That the Madras Children (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 10 of 1958), as passed by the Legislative Assembly, be taken into consideration.'

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2 to 11 were put and carried.

*Clause* 12.

DEPUTY CHAIRMAN : The motion is—

'That clause 12 do stand part of the Bill.'

DEPUTY CHAIRMAN : Is the hon. Member Srimathi Clubwala Jadhav moving her amendment?

* SRIMATHI MARY C. CLUBWALA JADHAV : Yes, Sir, I move the following amendment :—

'In section 29 of the principal Act for the words "a court" wherever they occur, *substitute* the words "a Welfare Committee".'

DEPUTY CHAIRMAN : In the light of what the Hon. Minister has stated, is the hon. Member pressing her amendment?

* SRIMATHI MARY C. CLUBWALA JADHAV : Just for the conscientious satisfaction that this has been suggested for the sake of the child, I have moved it and I should like to quote what the greatest exponent in children's welfare work, Dr. (Mrs.) Muthulakshmi Reddi has stated—

'Orphan destitutes are not properly taken care of in the Presidency. I served on the Committee of a Home in Madras for a number of years. Though the donor donated a certain amount for the Orphanage, I found in the year 1927, when I became a member of that Committee, that it was only a Junior Certified School, i.e., a school admitting vagrant and delinquent children committed by the Police and the Magistrates and I also discovered that the orphan destitutes had to go through a Magistrate or Police before gaining admission into that Home and further, after the completion of their tenth year, they were transferred to the

10th September 1958] [Srimathi Mary C. Clubwala Jadhav]

Reformatory Schools at Chingleput and Rajahmundry. The certified children according to the Madras Children Act, include the youthful offenders, the vagrants, those destitutes. Youthful offenders are those convicted of thefts, murders and uncontrollables. I naturally protested against the procedure as the will of the donor was to the effect that it should be run as a simple orphanage for children. The maangement told me then that they were forced to commit the children through the Police and the Magistrate simply because the certified school children got a grant through the Jail Department Rs. 10 per head whereas a mere orphan gets only two or three rupees per head. However, largely due to my pressure, few orphans were admitted into that Home as orphans and the majority were certified even two years before . . .

Though I served for a number of years on the committee and made many improvements therein, I could not induce the Committee to convert it into an orphanage. Therefore, I resigned from the committee . . .'

Sir, this happened many years ago. I am only saying that in the case of destitute children, they should not come through a court. I am saying this again only for my conscientious satisfaction. I did say also in the Joint Select Committee that there might be some lady magistrates on this body though not by the name of Magistrates. I have not cast any reflection on the honorary Magistrates. There were present three honorary lady Magistrates, namely, Mrs. Gopala Ratnam, Mrs. Sarojini Varadappan and myself and I said, 'Appoint us by name but not as honorary Magistrates.'

DEPUTY CHAIRMAN: You have seconder for your amendment?

* SRIMATHI MARY C. CLUBWALA JADHAV: I know, Sir, one by one my seconders are not available.

DEPUTY CHAIRMAN: For want of a seconder, the amendment falls through.

Clause 12 was put and carried.

Clauses 13 to 25 were put and carried.

The Schedule was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, I move—

'That the Madras Children (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 10 of 1958), as passed by the Legislative Assembly, be passed.'

DEPUTY CHAIRMAN: The question is—

'That the Madras Children (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 10 of 1958), as passed by the Legislative Assembly, be passed.'

The motion was put and carried and the Bill was passed.

[10th September 1958

DEPUTY CHAIRMAN : The House will now adjourn and meet again at 10 a.m. to-morrow.

The House then adjourned.

V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 139. *Notification issued with G.O. Ms. No. 2185, Public Works (Electricity), dated 9th August 1958, regarding framing of rules prescribing the term of office of the Chairman and other members of the Madras State Electricity Board, the conditions under which they shall be eligible for reappointment and their remuneration, allowances and other conditions of service.*

* 140. *Notification issued with G.O. Ms. No. 2732, Industries, Labour and Co-operation, dated 11th July 1958, regarding amendment to the rules made under the Madras Co-operative Societies Act, 1932 (Madras Act VI of 1932).*

*Bill passed by the Assembly and received therefrom in the Council—*

† *The Madras District Muniicpalities (Amendment) Bill,* 1958 (*L.A. Bill No.* 27 *of* 1958).



---

* Laid on the table of the House on 9th September 1958.

** Sent by special messenger on 9th September 1958.